# திருக்கூடலையாற்றூர் .

## திருச்சிற்றம்பலம்

வடிவுடை மழுஏந்தி மதகரி உரிபோர்த்துப்
பொடிஅணி திருமேனிப் புரிகுழல் உமையோடும்
கொடிஅணி நெடுமாடக் கூடலை யாற்றூரில்
அடிகள்இவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. 1

வையகம் முழுதுண்ட மாலொடு நான்முகனும்
பையர விளவல்குற் பாவையொ டும்முடனே
கொய்யணி மலர்ச்சோலைக் கூடலை யாற்றூரில்
ஐயனிவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. 2

ஊர்தொறும் வெண்டலைகொண் டுண்பலி இடுமென்று
வார்தரு மென்முலையாள் மங்கையொ டும்முடனே
கூர்நுனை மழுவேந்திக் கூடலை யாற்றூரில்
ஆர்வன்இவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. 3

சந்தண வும்புனலுந் தாங்கிய தாழ்சடையன்
பந்தண வும்விரலாள் பாவையொ டும்முடனே
கொந்தண வும்பொழில்சூழ் கூடலை யாற்றூரில்
அந்தணன் வழிபோந்த அதிசயம் அறியேனே. 4

வேதியர் விண்ணவரும் மண்ணவ ரும்தொழநற்
சோதிய துருவாகிச் சுரிகுழல் உமையோடும்
கோதிய வண்டறையுங் கூடலை யாற்றூரில்
ஆதிஇவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. 5

வித்தக வீணையொடும் வெண்புரி நூல்பூண்டு
முத்தன வெண்முறுவல் மங்கையொ டும்முடனே
கொத்தல ரும்பொழில்சூழ் கூடலை யாற்றூரில்
அத்தன்இவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. 6

---

1. அடிகள் - சுவாமி.
4. கொந்து - பூங்கொத்து.
6. வித்தகம் - கலைத்திறம்.

மழைநுழை மதியமொடு வாளர வஞ்சடைமேல்
இழைநுழை துகில்அல்குல் ஏந்திழை யாளோடும்
குழையணி திகழ்சோலைக் கூடலை யாற்றூரில்
அழகன்இவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. 7

மறைமுதல் வானவரும் மாலயன் இந்திரனும்
பிறைநுதல் மங்கையொடும் பேய்க்கண முஞ்சூழக்
குறள்படை யதனோடுங் கூடலை யாற்றூரில்
அறவன்இவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. 8

வேலையின் நஞ்சுண்டு விடையது தான்ஏறிப்
பாலன மென்மொழியாள் பாவையொ டும்முடனே
கோலம தருவாகிக் கூடலை யாற்றூரில்
ஆலன்இவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. 9

கூடலை யாற்றூரிற் கொடியிடை யவளோடும்
ஆடலு கந்தானை அதிசயம் இதுவென்று
நாடிய இன்றமிழால் நாவல வூரன்சொல்
பாடல்கள் பத்தும்வல்லார் தம்வினை பற்றறுமே. 10

திருச்சிற்றம்பலம்

நாடு : நடுநாடு

சுவாமி: நெறிகாட்டும் நாயகர்; அம்பிகை: புரிகுழல்நாயகி.

வரலாறு: சுந்தரமூர்த்தி சுவாமிகள் பல தலங்களைத் தரிசித்து வரும்போது, கூடலையாற்றூருக்கு அருகில் வந்தும் அத்தலத்துக்குச் செல்லாமல் திருமுதுகுன்றை நோக்கிச் செல்லலானார். அப்பொழுது சிவபெருமான் வழியிடையே ஓர் அந்தணராய் நிற்க, அவரைக் கண்டு சுந்தரர், முதுகுன்றுக்கு வழி யாதென்று வினவினர். இந்தக் கூடலையாற்றூர் வழியாகப் போகவேண்டுமென்று பெருமான் வழிகாட்டிப் பின்வர, சுந்தரர் கூடலையாற்றூரை அணுகியவுடன் பின்வந்த சிவபெருமான் மறைந்தருளினார். அந்த அதிசயம் உணர்ந்து இத்திருப்பதிகத்தைப்பாடினர் (பெரிய. ஏயர்கோன். 100 - 103).

---

8. குறள்படை - குட்டையாகிய உருவத்தையுடைய பூதப்படை.

9. ஆலன் - ஆலடியில் தட்சிணாமூர்த்தியாக இருந்தவன்.

## 14. பண் - சீகாமரம்

# திருவன்பார்த்தான் பனங்காட்டூர்

### திருச்சிற்றம்பலம்

விடையின்மேல் வருவானை வேதத்தின் பொருளானை,
அடையில்அன் புடையானை யாவர்க்கும் அறியொண்ணு,
மடையில்வா ளைகள்பாயும் வன்பார்த்தான் பனங்காட்டூர்ச்,
சடையிற்கங்கை தரித்தானைச் சாராதார் சார்பென்னே. 1

அறையும்பைங் கழல்ஆர்ப்ப அரவாட அனல்ஏந்திப்,
பிறையுங்கங் கையுஞ்சூடிப் பெயர்ந்தாடும் பெருமானுர்,
பறையுஞ்சங் கொலிஓவாப் படிறன்றன் பனங்காட்டூர்,
உறையும்எங்கள் பிரானுரை உணராதார் உணர்
வென்னே. 2

தண்ணார்மா மதிசூடித் தழல்போலுந் திருமேனிக்,
கெண்ணார்நாள் மலர்கொண்டங் கிசைந்தேத்தும் அடியார்
கள், பண்ணார்பா டல்அறுத படிறன்றன் பனங்காட்டூர்,
பெண்ணாண யபிரானைப் பேசாதார் பேச்சென்னே. 3

நெற்றிக்கண் உடையானை நீறேறுந் திருமேனிக்,
குற்றமில் குணத்தானைக் கோணுதார் மனத்தானைப்,
பற்றிப்பாம் பரைஆர்த்த படிறன்றன் பனங்காட்டூர்ப்,
பெற்றொன்றே றும்பிரானைப் பேசாதார் பேச்சென்னே. 4

உரமென்னும் பொருளானை உருகில்உள் உறைவானைச்,
சிரமென்னுங் கலனானைச் செங்கண்மால் விடையானை, வரம்

---

1. அடையில் - முடிவடையாத.
2. அறையும் - ஒலிக்கும்.
3. பெண்ணும் ஆணும் ஆகிய பிரானை.
4. கோணுதார் - நேர்மையுடையார். பெற்று - இடபம்.

முன்னம் அருள்செய்வான் வன்பார்த்தான் பனங் காட்டூர்ப், பரமன்எங் கள்பிரானைப் பரவாதார் பர வென்னே. 5

எயிலார்பொக் கம்எரித்த எண்டோள்முக் கணிறை வன், வெயிலாய்க்காற் றெனவீசி மின்னாய்த்தீ எனநின்றான், மயிலார்சோ லைகள்சூழ்ந்த வன்பார்த்தான் பனங்காட்டூர்ப், பயில்வானுக் கடிமைக்கட் பயிலாதார் பயில்வென்னே. 6

மெய்யன்வெண் பொடிபூசும் விகிர்தன்வே தமுதல் வன், கையில்மான் மழுவேந்திக் காலன்கா லம்அறுத்தான், பைகொள்பாம் பரைஆர்த்த படிறன்றன் பனங்காட்டூர், ஐயன்எங்கள் பிரானை அறியாதார் அறிவென்னே. 7

வஞ்சமற்ற மனத்தாரை மறவாத பிறப்பிலியைப், பஞ்சிச்சீ றடியாளைப் பாகம்வைத் துகந்தானை, மஞ்சுற்ற மணிமாட வன்பார்த்தான் பனங்காட்டூர், நெஞ்சத்தெங் கள்பிரானை நினையாதார் நினைவென்னே. 8

மழையானுந் திகழ்கின்ற மலரோன்என் றிருவர்தாம், உழையாநின் றவர்உள்க உயர்வானத் துயர்வானைப், பழையானைப் பனங்காட்டூர் பதியாகத் திகழ்கின்ற, குழை காதற் கடிமைக்கட் குழையாதார் குழைவென்னே. 9

பாரூரும் பனங்காட்டூர்ப் பவளத்தின் படியானைச், சீரூருந் திருவாரூர்ச் சிவன்பேர்சென் னியில்வைத்த, ஆரூ

---

5. உரம் - அறிவு. கலன் - பாத்திரம். வரம் அருள் செய்வான்.

6. பொக்கம் - பொய்த்தன்மை.

7. காலன் காலம் அறுத்தான் - யமனுக் கணக்குப் பண் ணும் மார்க்கண்டேயனது ஆயுட்காலமுடிவை நீக்கினவன்.

9. மழையானும் - மேகத்தைப்போன்ற நிறத்தையுடைய திருமாலும். உழையாநின்றவர் - பக்கத்தில் நின்றவர்கள்.

10. பவளத்தின் படியானை - பவளத்தைப்போன்ற சிவந்த திருவுருவம் உடையானை. ஊரூரன் - ஊர்தோறும்.

ரன் னடித்தொண்டன் அடியன்சொல் அடிநாய்சொல், ஊரூரன் உரைசெய்வார் உயர்வானத் துயர்வாரே. 10

திருச்சிற்றம்பலம்

நாடு : தொண்டை நாடு

சுவாமி: பனங்காட்டுநாதர்; அம்பிகை: அமிர்தவல்லி.

---

## திருப்பனையூர்

### திருச்சிற்றம்பலம்

மாடமாளிகை கோபுரத்தொடு மண்டபம்வள ரும்வளர்பொழில், பாடல் வண்டறையும் பழனத் திருப்பனையூர்த், தோடுபெய்தொரு காதினிற்குழை தூங்கத்தொண்டர்கள் துள்ளிப்பாடநின்,றாடு மாறுவல்லார் அவரே அழகியரே. 1

நாறுசெங்கழு நீர்மலர்நல்ல மல்லிகை சண்பகத்தொடு, சேறுசெய் கழனிப் பழனத் திருப்பனையூர், நீறுபூசிநெய் யாடிதன்னை நினைப்பவர்தம் மனத்தன் ஆகிநின், றாறு சூடவல்லார் அவரே அழகியரே. 2

செங்கண் மேதிகள் சேடெறிந்து தடம்படிதலிற் சேல்இனத்தொடு, பைங்கண் வாளைகள்பாய் பழனத் திருப்பனையூர்த், திங்கள்சூடிய செல்வனார்அடி யார்தம்மேல்வினை தீர்ப்பராய்விடில், அங்கிருந் துறைவார் அவரே அழகியரே. 3

வாளைபாய மலங்கிளங்கயல் வரிவரால்உக ளுங்கழனியுள், பாளைஒண் கமுகம் புடைசூழ் திருப்பனையூர்த்,

---

1. பழனம் - வயல்.
3. சேடு - சேறு. தடம் - குளம்.

தோளுமாகமுந் தோன்றநட்டமிட் டாடுவார்அடித் தொண் டர்தங்களை, ஆளு மாறுவல்லார் அவரே அழகியரே. 4

கொங்கை யார்பலருங்குடைந் தாடநீர்க்குவளை மலர் தரப், பங்கயம் மலரும் பழனத் திருப்பனையூர், மங்கை பாகமும் மாலொர்பாகமுந் தாம்உடையவர் மான்மழு வினோடு, டங்கைத் தீஉகப்பார் அவரே அழகியரே. 5

காவிரிபுடை சூழ்சோணாட்டவர் தாம்பரவிய கருணை யங்கடல்அப்,பாவிரி புலவர் பயிலுந் திருப்பனையூர், மாவிரி மட நோக்கிஅஞ்ச மதகிரிஉரி போர்த்துகந்தவர், ஆவில்ஐந் துகப்பார் அவரே அழகியரே. 6

மரங்கள்மேல்மயில் ஆலமண்டப மாடமாளிகை கோபுரத்தின்மேல், திரங்கல்வன் முகவன் புகப்பாய் திருப் பனையூர்த், துரங்கன்வாய்பிளந் தானுந் தூமலர்த் தோன்ற லும்மறி யாமற்றோன்றிநின், றரங்கில் ஆடவல்லார் அவரே அழகியரே. 7

மண்ணெலாம்முழ வம்மதிர்தர மாடமாளிகை கோபு ரத்தின்மேல், பண்ணி யாழ்முர லும் பழனத் திருப்பனையூர், வெண்ணிலாச்சடை மேவியவிண் ணவரொடுமண் ணவர் தொழ, அண்ணல் ஆகிநின்றார் அவரே அழகியரே. 8

குரக்கினங்குதி கொள்ளத்தேன்உகக் குண்டுதண்வயற் கெண்டைபாய்தரப், பரக்குந் தண்கழனிப் பழனத் திருப் பனையூர், இரக்கம் இல்லவர் ஐந்தொடைந்தலை தோள்இரு பது தாள்நெரிதர, அரக்கனை அடர்த்தார் அவரே அழகி யரே. 9

---

4. மலங்கு - ஒருவகை மீன். உகளும் - துள்ளும்.
6. மா விரி - மாவடுவின் தன்மை விரிந்த.
7. திரங்கல் - சுருங்கிய தோலையுடைய. வன்முகவன் - குரங்கு. துரங்கன்-குதிரையாக நின்ற கேசி என்னும் அசுரன். வாய்பிளந்தான் - திருமால்.
9. உகக்குண்டு - உகக்க உண்டு

வஞ்சிநுண்ணிடை மங்கைபங்கினர் மாதவர்வளரும் வளர்பொழில், பஞ்சின் மெல்லடியார் பயிலுந் திருப்பனையூர், வஞ்சியும்வளர் நாவலூரன் வனப்பகையவள் அப்பன் வன்றொண்டன், செஞ்சொற் கேட்டுகப்பார் அவரே அழகியரே. 10

**திருச்சிற்றம்பலம்**

நாடு: சோழ நாடு

சுவாமி: சௌந்தரநாதர்; அம்பிகை: பெரியநாயகி.

வரலாறு: **திருப்புகலூரைத் தரிசித்துக்கொண்டு செல்லும் சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருப்பனையூரை நோக்கி வருகையில் ஊர்ப்புறத்தே இறைவர் திருநடனக்காட்சியை அருளத் தரிசித்து இறைஞ்சி இப்பதிகத்தைப்பாடினார்** (பெரிய. ஏயர்கோன் 52—3.)

---

## திருவீழிமிழலை

**திருச்சிற்றம்பலம்**

நம்பினார்க்கருள் செய்யும்அந்தணர் நான்மறைக்கிடம் ஆய வேள்வியுள், செம்பொனேர் மடவார் அணிபெற்ற திருமிழலை, உம்பரார்தொழு தேத்தமாமலை யாளொடும்முடனேஉறைவிடம், அம்பொன் வீழிகொண்டீர் அடியேற்கும் அருளுதிரே. 1

விடங்கொள் மாமிடற் றீர்வெள்ளைச்சுருள் ஒன் றிட்டு விட்ட காதினீர் என்று, திடங்கொள் சிந்தையினார் கலிகாக்குந் திருமிழலை, மடங்கல்பூண்ட விமானமண்மிசை

---

1. செம்பொன் நேர் மடவார் - சிவந்த திருமகளை **ஒத்த** மகளிர்.

2. **சுருள் - தோடு. கலிகாக்கும் - துன்பத்தை வராமல்** பாதுகாக்கும். **மடங்கல்** - சிங்கம். **இழிச்சிய - இறங்கச்செய்த.** திருவீழிமிழலையில் **விண்ணிழி விமானம் உண்டு. திருமால்** கொண்டு வந்தாரென்பது **தலவரலாறு.**

வந்திழிச்சிய வானநாட்டையும், அடங்கல் வீழிகொண்டீர் அடியேற்கும் அருளுதிரே. 2

ஊனைஉற்றுயிர் ஆயினீர்ஒளி மூன்றுமாய்த்தெளி நீரோடானஞ்சின், தேனை ஆட்டுகந்தீர் செழுமாடத் திருமிழலை, மானைமேவிய கையினீர்மழு ஏந்தினீர்மங்கை பாகத்தீர் விண்ணில், ஆனை வீழிகொண்டீர் அடியேற்கும் அருளுதிரே. 3

பந்தம்வீடிவை பண்ணினீர்படி நீர்மதிப்பிதிர்க் கண்ணியீர் என்று, சிந்தைசெய் நான்மறையோர் சிறந்தேத்துந் திருமிழலை, வந்துநாடகம் வானநாடியர் ஆடமால் அயன் ஏத்த நாடோறும், அந்தண் வீழிகொண்டீர் அடியேற்கும் அருளுதிரே. 4

புரிசைமூன்றையும் பொன்றக்குன்றவில் ஏந்திவேதப் புரவித்தேர்மிசைத், திரிசெய் நான்மறையோர் சிறந்தேத்துந் திருமிழலைப், பரிசினால்அடி போற்றும் பத்தர்கள் பாடிஆடப் பரிந்துநல்கினீர், அரிய வீழிகொண்டீர் அடியேற்கும் அருளுதிரே. 5

எறிந்தசண்டி இடந்தகண்ணப்பன் ஏத்துபத்தர்கட் கேற்றம்நல்கினீர், செறிந்த பூம்பொழில் தேன்துளிவீசுந் திருமிழலை, நிறைந்த அந்தணர் நித்தம்நாள்தொறும் நேசத்தால்உமைப் பூசிக்கும்மிடம், அறிந்து வீழிகொண்டீர் அடியேற்கும் அருளுதிரே. 6

---

3. ஊனை உற்று - உடம்பை அடைந்து. ஒளி மூன்று - சந்திர சூரியாக்கினிகள்.

4. படிநீர் - பட்சபாதம் உடையீர். மதி தலையிற் சூடுவதாதலின் அதைக் கண்ணியென்றார். மதிப்பிதிர் - பிறை. வானநாடியர் - வானுலகத்திலுள்ள அரம்பையர்.

5. பொன்ற - அழிய. பரிந்து - விரும்பி.

6. எறிந்த சண்டி - தம் தந்தையாரின் காலை வெட்டிய

பணிந்தபார்த்தன் பகீரதன்பல பத்தர்சித்தர்க்குப் பண்டுநல்கினீர், திணிந்த மாடந்தொறுஞ் செல்வம்மல்கு திருமிழலைத், தணிந்த அந்தணர் சந்திநாள்தொறும் அந்தி வான்இடு பூச்சிறப்பவை, அணிந்து வீழிகொண்டீர் அடியேற்கும் அருளுதிரே. 7

பரந்தபாரிடம் ஊரிடைப்பலி பற்றிப் பார்த்துணுஞ் சுற்றம் ஆயினீர், தெரிந்த நான்மறை யோர்க்கிடம் ஆகிய திருமிழலை, இருந்துநீர்தமிழோடிசைகேட்கும் இச்சையாற் காசு நித்தம்நல்கினீர், அருந்தண் வீழிகொண்டீர் அடியேற்கும் அருளுதிரே. 8

தூயநீர்அமு தாயவாறது சொல்லு கென்றுமைக் கேட்கச்சொல்லினீர், தீயராக்குலை யாளர் செழுமாடத் திருமிழலை, மேயநீர்பலி ஏற்றதென்னென்று விண்ணப்பஞ் செய் பவர்க்குமெய்ப்பொருள், ஆய வீழிகொண்டீர் அடியேற்கும் அருளுதிரே. 9

வேதவேதியர் வேதநீதியர் ஓதுவார்விரி நீர்மிழலையுள், ஆதி வீழிகொண்டீர் அடியேற்கும் அருளுகென்று, நாத கீதம்வண் டோதுவார்பொழில் நாவலூரன்வன் றொண் டன்நற்றமிழ், பாதம் ஓதவல்லார் பரனோடு கூடுவரே. 10

திருச்சிற்றம்பலம்

நாடு: சோழ நாடு

சுவாமி: வீழியழகர்; அம்பிகை; சுந்தரகுசாம்பிகையம்மை.

---

சண்டேச நாயனர். இடந்த - கண்ணை இடந்த.

7. பார்த்தன் - அருச்சுனன். திணிந்த - வளம் செறிந்த. தணிந்த - சினம் ஆறிய; சாந்த இயல்புடைய. சந்திதோறும், நாள்தோறும் எனக் கூட்டுக,

8. பாரிடம் - பூதம். காசு நித்தல் நல்கினீர்: இத்தலத் தில் ஞானசம்பந்தருக்கும் அப்பர் சுவாமிகளுக்கும் சிவபெரு மான் படிக்காசு அருளினர்.

9. தீயர் ஆக்கு உலையாளர் - வேள்வித் தீயை உடைய அந்தணரும், பிறருக்கு உணவிடும் பொருட்டு ஆக்கும் உலையை யுடைய அறவாணரும் வாழும்.

10. வண்டு நாதகீதத்தை ஓதும் வார்பொழில்.

# திருவெண்பாக்கம்

## திருச்சிற்றம்பலம்

பிழையுளன பொறுத்திடுவர் என்றடியேன் பிழைத் தக்கால்,பழியதனைப் பாராதே படலமென்கண் மறைப்பித் தாய், குழைவிரவு வடிகாதா கோயிலுளா யேஎன்ன, உழையுடையான் உள்ளிருந் துளோம்போகீர் என்றானே.

இடையறியேன் தலையறியேன் எம்பெருமான் சரணம்என்பேன், அடையுடையன் நம்மடியான் என்றவற்றைப் பாராதே, விடையுடையான் விடநாகன் வெண்ணீற்றன் புலியின்தோல், உடையுடையான் எனையுடையான் உளோம்போகீர் என்றானே. 2

செய்வினைஒன் றறியாதேன் திருவடியே சரணென்று, பொய்யடியேன் பிழைத்திடினும் பொறுத்திடநீ வேண்டாவோ, பையரவா இங்கிருந்தா யோஎன்னப் பரிந்தென்னை, உய்யஅருள் செய்யவல்லான் உளோம்போகீர் என்றானே. 3

கம்பமருங் கரிஉரியன் கறைமிடற்றன் காபாலி, செம்பவளத் திருவுருவன் சேயிழையோ டுடனாகி, நம்பிஇங்கே இருந்தீரே என்றுநான் கேட்டலுமே, உம்பர்தனித் துணைஎனக் குளோம்போகீர் என்றானே. 4

பொன்னிலங்கு நறுங்கொன்றை புரிசடைமேற் பொலிந்திலங்க, மின்னிலங்கு நுண்ணிடையாள் பாகமா எருதேறி, துன்னியிரு பால்அடியார் தொழுதேத்த அடியேனும், உன்னமதாய்க் கேட்டலுமே உளோம்போகீர் என்றானே. 5

---

1. படலம் - கண்ணை மறைக்கும் தோற்படலம். வடிகாது - தாழ்ந்த காது. உளாயே: வினா. உழை – மான்.
2. அடை உடையன் - நம்பால் அடுத்தலை உடையவன்.
4. கம்பு அமரும் - கட்டுத் தறியிலே பொருந்தும்.

ஏராரும் பொழில்நிலவு வெண்பாக்கம் இடங்கொண்ட, காராரும் மிடற்றானைக் காதலித்திட் டன்பினொடும், சீராருந் திருவாரூர்ச் சிவன்பேர்சென் னியில்வைத்த, ஆரூரன் தமிழ்வல்லார்க் கடையாவல் வினைதானே. 11

திருச்சிற்றம்பலம்

நாடு: தொண்டை நாடு

சுவாமி: வெண்பாக்கநாதர்; அம்பிகை; கனிவாய்மொழி.

**வரலாறு:** திருவொற்றியூரை அகன்று வருகையில் இரண்டு கண்ணும் இழந்த சுந்தரமூர்த்தி சுவாமிகள் வெண்பாக்கத்துக்கு வந்து தொண்டர்கள் புடைசூழத் திருக்கோயிலை வலம் வந்து இறைவரை வணங்கி, "இறைவரே, நீர் கோயிலில் உள்ளீரா?" எனக் கேட்க, சிவபெருமான் சுவாமிகளுக்கு ஊன்றுகோல் ஒன்று அளித்து, "உளேம், போகீர்" என்று அருளினார். அயலாரைப்போல அவ்வாறு சொல்லவே சுவாமிகள் இப்பதிகத்தைப் பாடினார் (பெரிய. ஏயர்கோன். 278—280.)

---

## 15. பண் - குறிஞ்சி

### கோயில்

திருச்சிற்றம்பலம்

மடித்தாடு மடிமைக்கண் அன்றியே மனனேநீ வாழும் நாளும், தடுத்தாட்டித் தருமனார் தமர்செக்கில் இடும்போது தடுத்தாட் கொள்வான், கடுத்தாடு கரதலத்தில் தமருகமும் எரிஅகலுங் கரிய பாம்பும், பிடித்தாடி புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்றா மன்றே. 1

---

1. அடிமைக்கண் மடித்து ஆடும் - தனக்கு அடிமையாக இருக்கும் தன்மையில் நம்மைத் திருப்பி ஆட்கொள்வான். அன்றியே - அஃது அல்லாமலும். வாழும் நாளைத் தடுத்து அலைத்து யமனுடைய ஏவலர் செக்கில் இடும்போதும் ஆட்கொள்வான். ஆட்டி - அலைத்து.

சடையன் பரஞ்சோதி பாவந் தீர்க்கும், பித்தாடி புலியூர்ச் சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்ற மன்றே. 6

முட்டாத முச்சந்தி மூவா யிரவர்க்கு மூர்த்தி என்னப், பட்டானைப் பத்தராய்ப் பாவிப்பார் பாவமும் வினையும் போக, விட்டானை மலையெடுத்த இராவணனைத் தலைபத்தும் நெரியக் காலால், தொட்டானைப் புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்ற மன்றே. 7

கற்றானுங் குழையுமா றன்றியே கருதுமா கருத கிற்றார்க், கெற்றாலுங் குறைவில்லை என்பர்காண் உள்ளமே நம்மை நாளுஞ், செற்றாட்டித் தருமனார் தமர்செக்கில் இடும்போது தடுத்தாட் கொள்வான், பெற்றேறி புலி யூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்ற மன்றே. 8

நாடுடைய நாதன்பால் நன்றென்றுஞ் செய்மனமே நம்மை நாளும், தாடுடைய தருமனார் தமர்செக்கில் இடும் போது தடுத்தாட் கொள்வான், மோடுடைய சமணர்க்கும் முடையுடைய சாக்கியர்க்கும் மூடம் வைத்த, பீடுடைய புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்ற மன்றே.

பாருரும் அரவல்குல் உமைநங்கை யவள்பங்கன் பைங்கண் ஏற்றன், ஊரூரன் தருமனார் தமர்செக்கில் இடும் போது தடுத்தாட் கொள்வான், ஆரூரன் தம்பிரான் ஆரூ ரன் மீகொங்கில் அணிகாஞ் சிவாய்ப், பேரூரர் பெருமானைப் புலியூர்ச்சிற் றம்பலத்தே பெற்ற மன்றே. 10

திருச்சிற்றம்பலம்

---

7. முட்டாத - இடையீடுபடாத. காலால் மலையைத் தொட்ட அளவிலே இராவணன் தலைகள் நெரிந்தன என்றபடி.

8. கல்தானும். கருத கிற்றார்க்கு - கருதும் வன்மையை யுடையாருக்கு. செற்று - வருத்தி. பெற்று - பெற்றம்; இடபம்

9. தாடு - தடுத்தல். மோடு - பெருவயிறு. முடை - நாற்றம். மூடம் - அறியாமை.

10. மீகொங்கு - மேல் கொங்குநாடு. காஞ்சிவாய்ப் பேரூர் - திருப்பேரூர் என்னும் தலம்; காஞ்சி - நொய்யில் என்னும் ஆறு.

## திருவொற்றியூர்

### திருச்சிற்றம்பலம்

பாட்டும் பாடிப் பரவித் திரிவார்
ஈட்டும் வினைகள் தீர்ப்பார் கோயில்
காட்டுங் கலமுந் திமிலுங் கரைக்கே
ஓட்டுந் திரைவாய் ஒற்றி யூரே. 1

பந்துங் கிளியும் பயிலும் பாவை
சிந்தை கவர்வார் செந்தீ வண்ணர்
எந்தம் மடிகள் இறைவர்க் கிடம்போல்
உந்துந் திரைவாய் ஒற்றி யூரே. 2

பவளக் கனிவாய்ப் பாவை பங்கன்
கவளக் களிற்றின் உரிவை போர்த்தான்
தவழும் மதிசேர் சடையாற் கிடப்போல்
உகளுந் திரைவாய் ஒற்றி யூரே. 3

என்ன தெழிலும் நிறையும் கவர்வான்
புன்னை மலரும் புறவில் திகழும்
தன்னை முன்னம் நினைக்கத் தருவான்
உன்னப் படுவான் ஒற்றி யூரே. 4

பணங்கொள் அரவம் பற்றிப் பரமன்
கணங்கள் சூழக் கபாலம் ஏந்தி
வணங்கும் இடைமென் மடவார் இட்ட
உணங்கல் கவர்வான் ஒற்றி யூரே. 5

படையார் மழுவன் பால்வெண் ணீற்றன்
விடையார் கொடியன் வேத நாவன்
அடைவார் வினைகள் அறுப்பான் என்னை
உடையான் உறையும் ஒற்றி யூரே. 6

---

1. **வினைகள்** - பாவங்கள். கலம் - கப்பல். **திமில்** - **மீன்படகு.**
2. போல்: போலும் என்பதன் விகாரம்.
5. பணம் - படம். உணங்கல் - புழுங்கலரிசிச் சோறு.

சென்ற புரங்கள் தீயில் வேவ
வென்ற விகிர்தன் வினையை வீட்ட
நன்று நல்ல நாதன் நரையே
றொன்றை உடையான் ஒற்றி யூரே. 7

கலவ மயில்போல் வளைக்கை நல்லார்
பலரும் பரவும் பவளப் படியான்
உலகின் உள்ளார் வினைகள் தீர்ப்பான்
உலவுந் திரைவாய் ஒற்றி யூரே. 8

பற்றி வரையை எடுத்த அரக்கன்
இற்று முரிய விரலால் அடர்த்தார்
எற்றும் வினைகள் தீர்ப்பார் ஓதம்
ஒற்றுந் திரைவாய் ஒற்றி யூரே. 9

ஒற்றி யூரும் அரவும் பிறையும்
பற்றி யூரும் பவளச் சடையான்
ஒற்றி யூர்மேல் ஊரன் உரைத்த
கற்றுப் பாடக் கழியும் வினையே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருப்புக்கொளியூர் அவிநாசி

திருச்சிற்றம்பலம்

எற்றான் மறக்கேன் எழுமைக்கும் எம்பெரு
மானையே,உற்றாய்என் றுன்னையே உள்குகின் றேன்உணர்ந்
துள்ளத்தால், புற்று டரவா புக்கொளி யூரவி நாசியே,
பற்றாக வாழ்வேன் பசுபதி யேபர மேட்டியே. 1

---

8. நல்லார் - மகளிர். பவளப்படியான் - பவளம்போன்ற திருமேனியை உடையான்; படி - உருவம்.

9. ஓதம் ஒற்றும் - கடலின் நீர் மோதும்.

10. ஒற்றி ஊரும் - மேலே பற்றி ஊர்கின்ற. உரைத்த - பாடிய பாடல்களை.

1. உள்குகின்றேன் - நினைக்கின்றேன்.

வழிபோவார் தம்மோடும் வந்துடன் கூடிய மாணிநீ, ஒழிவ தழகோ சொல்லாய் அருளோங்கு சடையானே. பொழிலாருஞ் சோலைப் புக்கொளி யூரிற் குளத்திடை, இழியாக் குளித்த மாணி எனைக்கிறி செய்ததே. 2

எங்கேனும் போகினும் எம்பெரு மானை நினைந்தக் கால், கொங்கே புகினுங் கூறைகொண் டாறலைப் பார்இலை, பொங்கா டரவா புக்கொளி யூரவி நாசியே, எங்கோ னேஉனை வேண்டிக்கொள் வேன்பிற வாமையே. 3

உரைப்பார் உரைஉகந் துள்கவல் லார்தங்கள் உச்சி யாய், அரைக்கா டரவா ஆதியும் அந்தமும் ஆயினாய், புரைக் காடு சோலைப் புக்கொளி யூரவிநாசியே, கரைக்கால் முதலை யைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே. 4

அரங்காவ தெல்லா மாயிடு காடது அன்றியும், சரங்கோலை வாங்கி வரிசிலை நாணியிற் சுந்தித்துப், புரங் கோட எய்தாய் புக்கொளி யூரவி நாசியே, குரங்காடு சோலைக் கோயில்கொண் டகுழைக் காதனே. 5

நாத்தானும் உனைப்பாடல் அன்றிநவி லாதெனாச், சோத்தென்று தேவர் தொழநின்ற சுந்தரச் சோதியாய், பூத்தாழ் சடையாய் புக்கொளி யூரவி நாசியே, கூத்தா உனக்குநான் ஆட்பட்ட குற்றமுங் குற்றமே. 6

---

2. மாணி - பிரமசாரி. இழியா - இறங்கி. கிறி - வஞ்சகம்.

3. கொங்கு - கொங்கு நாடு. கூறைகொண்டு - ஆடையைக் கவர்ந்துகொண்டு.

4. உச்சியாய் - தலைமேல் உள்ளவனே. புரைக்கு ஆடு - உயர்வதற்காக ஆடுகின்ற; புரை - உயர்வு.

5. ஆய் இடுகாடு அரங்காவது. சரமாகிய கோலை; கோல் - அம்பு. சந்தித்து - பூட்டி.

6. சோத்து - தோத்திரம். குற்றமே : வினா.

மந்தி கடுவனுக் குண்பழம் நாடி மலைப்புறம், சந்திகள் தோறுஞ் சலபுட்பம் இட்டு வழிபடப், புந்தி உறைவாய் புக்கொளி யூரவி நாசியே, நந்தி உனைவேண்டிக் கொள்வேன் நரகம் புகாமையே. 7

பேணு தொழிந்தேன் உன்னை அலாற்பிற தேவரைக், காணு தொழிந்தேன் காட்டுதி யேல்இன்னங் காண்பன் நான், பூணும் அரவா புக்கொளி யூரவி நாசியே, காணுத கண்கள் காட்டவல் லகறைக் கண்டனே. 8

நள்ளாறு தெள்ளா றரத்துறை வாய்எங்கள் நம்பனே. வெள்ளாடை வேண்டாய் வேங்கையின் தோலை விரும்பினாய், புள்ளேறு சோலைப் புக்கொளி யூரிற் குளத்திடை, உள்ளாடப் புக்க மாணியென் னைக்கிறி செய்ததே. 9

நீரேற ஏறும் நிமிர்புன் சடை நின்மல மூர்த்தியைப், போரேற தேறியைப் புக்கொளி யூரவி நாசியைக், காரேறு கண்டனைத் தொண்டன் ஆரூரன் கருதிய, சீரேறு பாடல்கள் செப்பவல் லார்க்கில்லை துன்பமே. 10

திருச்சிற்றம்பலம்

நாடு: கொங்கு நாடு

சுவாமி: அவிநாசியப்பர்

அம்பிகை: பெருங்கருணை நாயகி

வரலாறு: அவிநாசியில் அந்தணர் குலத்துச் சிறுவன் ஒருவனை முதலை சில ஆண்டுகளுக்குமுன் உண்டதென்று அறிந்த சுந்தரமூர்த்தி சுவாமிகள், இத்திருப்பதிகம் பாடி, மீண்டும் அச்சிறுவனைத் தக்க வளர்ச்சியுடன் அழைப்பித்தார்.

---

7. மந்தி - பெண் குரங்கு. கடுவன் - ஆண் குரங்கு. சலமும் புட்பமும் இட்டு.

8. பிற தேவரைப் பேணுதொழிந்தேன். பூணும் நாணும் அரவமாக உள்ளவனே.

# திருநறையூர்ச் சித்தீச்சரம்

## திருச்சிற்றம்பலம்

நீரும் மலரும் நிலவும் சடைமேல்
ஊரும் அரவம் உடையான் இடமாம்
வாரும் அருவி மணிபொன் கொழித்துச்
சேரும் நறையூர்ச் சித்தீச் சரமே. 1

அளைப்பை அரவேர் இடையாள் அஞ்சத்
துளைக்கைக் கரித்தோல் உரித்தான் இடமாம்
வளைக்கைம் மடவார் மடுவில் தடநீர்த்
திளைக்கும் நறையூர்ச் சித்தீச் சரமே. 2

இகழுந் தகையோர் எயில்மூன் றெரித்த
பகழி யொடுவில் உடையோன் பதிதான்
முகிழ்மென் முலையார் முகமே கமலம்
திகழும் நறையூர்ச் சித்தீச் சரமே. 3

மறக்கொள் அரக்கன் வரைதோள் வரையால்
இறக்கொள் விரற்கோன் இருக்கும் இடமாம்
நறக்கொள் கமலந் நனிபள் ளிஎழத்
திறக்கும் நறையூர்ச் சித்தீச் சரமே. 4

முழுநீ றணிமே னியன்மொய் குழலார்
எழுநீர் மைகொள்வான் அமரும் இடமாம்
கழுநீர் கமழக் கயல்சேல் உகளுஞ்
செழுநீர் நறையூர்ச் சித்தீச் சரமே. 5

ஊனு ருடைவெண் டலைஉண் பலிகொண்
டானார் அடலே றமர்வான் இடமாய்

---

2. அளைப்பை அரவு - வளையில் வாழும் படத்தையுடைய பாம்பு. மடவார் நீரில் திளைக்கும்.

3. எயில் - மதில். பகழி - அம்பு. கமலம்போலத் திகழும்.

4. நற - தேன். நனி பள்ளி எழ - உள்ளே உள்ள வண்டு நன்றாகத் துயில் நீங்கும்படியாக.

வானூர் மதியம் பதிவண் பொழில்வாய்த்
தேனூர் நறையூர்ச் சித்தீச் சரமே. 6

காரூர் கடலில் விடம்உண் டருள்செய்
நீரூர் சடையன் நிலவும் இடமாம்
வாரூர் முலையார் மருவும் மறுகில்
தேரூர் நறையூர்ச் சித்தீச் சரமே. 7

கரியின் உரியுங் கலைமான் மறியும்
எரியும் மழுவும் உடையான் இடமாம்
புரியும் மறையோர் நிறைசொற் பொருள்கள்
தெரியும் நறையூர்ச் சித்தீச் சரமே. 8

பேணா முனிவன் பெருவேள் வியெலாம்
மாணா மைசெய்தான் மருவும் இடமாம்
பாணார் குழலும் முழவும் விழவில்
சேணார் நறையூர்ச் சித்தீச் சரமே. 9

குறியில் வழுவாக் கொடுங்கூற் றுதைத்த
எறியும் மழுவாட் படையான் இடமாம்
நெறியில் வழுவா நியமத் தவர்கள்
செறியும் நறையூர்ச் சித்தீச் சரமே. 10

போரார் புரம்எய் புனிதன் அமரும்
சீரார் நறையூர்ச் சித்தீச் சரத்தை
ஆரூ ரன்சொல் இவைவல் லவர்கள்
ஏரார் இமையோர் உலகெய் துவரே. 11

திருச்சிற்றம்பலம்

நாடு : சோழ நாடு

சுவாமி : சித்தநாதர் ; அம்பிகை: அழகம்மை.

---

6. மதியம் பதிந்த பொழில்.
7. தேர் ஊர் - திருத்தேர் செல்கின்ற,
9. பேணா முனிவன் - தன்னைப் பூசியாத தக்கன். மாணாமை செய்தான் - சிறப்படையாமல் அழியச் செய்தான். பாண் - பாட்டு. சேண் ஆர் - நெடுந்தூரம் முழங்கும்.
10. குறியில் - இன்ன உயிரை இன்னகாலத்தில் கொள்ள வேண்டும் என்ற இலக்கில், நியமம் - விரதம்.

## 16. பண் - கௌசிகம்

# திருச்சோற்றுத்துறை

### திருச்சிற்றம்பலம்

அழல்நீர் ஒழுகி அனைய சடையும்
உழையீர் உரியும் உடையான் இடமாம்
கழைநீர் முத்துங் கனகக் குவையும்
சுழல்நீர்ப் பொன்னிச் சோற்றுத் துறையே. 1

பண்டை வினைகள் பறிய நின்ற
அண்ட முதல்வன் அமலன் இடமாம்
இண்டை கொண்டன் பிடைஅறாத
தொண்டர் பரவுஞ் சோற்றுத் துறையே. 2

கோல அரவுங் கொக்கின் இறகும்
மாலை மதியும் வைத்தான் இடமாம்
ஆலும் மயிலும் ஆடல் அளியும்
சோலை தருநீர்ச் சோற்றுத் துறையே. 3

பளிக்குத் தாரை பவள வெற்பில்
குளிக்கும் போல்நூற் கோமாற் கிடமாம்
அளிக்கும் ஆத்தி அல்லால் மதுவம்
துளிக்குஞ் சோலைச் சோற்றுத் துறையே. 4

---

1. நெருப்பில் நீர் ஓடினதுபோன்ற சடையும்; கங்கையமைந்த சடையாதலின் இங்ஙனம் கூறினார். உழையீர் உரி - மான்தோல். கழைநீர்முத்தும் - மூங்கிலில் உண்டான நல்லியல்பையுடைய முத்தும்.

2. இண்டை - ஒரு வகை மாலை.

3. ஆலும் - ஆடும். ஆடல் - அசைதல்.

4. பளிக்குத்தாரை - பளிங்கின் நீட்சி; இது பூணூலுக்கு உவமை. பவளவெற்பு, சிவபெருமான் திருமேனிக்கு உவமை.

உதையுங் கூற்றுக் கொல்கா விதிக்கு
வதையுஞ் செய்த மைந்தன் இடமாம்
திதையுந் தாதுந் தேனுஞ் ஞிமிறும்
துதையும் பொன்னிச் சோற்றுத் துறையே. 5

ஓதக் கடல்நஞ் சினைஉண் டிட்ட
பேதைப் பெருமான் பேணும் பதியாம்
சீதப் புனல்உண் டெரியைக் காலும்
சூதப் பொழில்சூழ் சோற்றுத் துறையே. 6

இறந்தார் என்பும் எருக்குஞ் சூடிப்
புறங்காட் டாடும் புனிதன் கோயில்
சிறந்தார் சுற்றந் திருவென் றின்ன
துறந்தார் சேருஞ் சோற்றுத் துறையே. 7

காமன் பொடியாக் கண்ஒன் றிமைத்த
ஓமக் கடலார் உகந்த இடமாம்
தேமன் குழலார் சேக்கை புகைத்த
தூமம் விசும்பார் சோற்றுத் துறையே. 8

---

5. கூற்றுக்கு உதையும் விதிக்கு வதையும் செய்த; விதி - பிரமதேவன். திதையும் - சிதறிய. தேன், ஞிமிறு, வண்டின் வகை. துதையும் - பொருந்தும்.

6. பேதைப்பெருமான் - கருணை செய்யுமிடத்துத் தகுதி பாராத பேதைமையை உடைய பெருமான்; அருள்மடம் உடையவன். எரியைக் காலும் சூதப் பொழில் - நெருப்பைக் கொப்புளித்தாற்போலச் செந்நிறத் தளிரைத் தழைக்கச் செய்யும் மாஞ்சோலை.

7. புறங்காடு - மயானம். தமக்கு அன்பு முதலியவற்றுற் சிறந்தவரையும் சுற்றத்தாரையும் செல்வத்தையும் பிற பொருள்களையும் துறந்தவர்கள்.

8. கண்ணொன்று என்றூர் நுதற்கண்ணுதவின். தேம்மன் குழலார்; தேம் - வாசனை. சேக்கை - இருப்பிடங்களில். குழலுக்குப் புகையூட்டும்பொருட்டுப் புகைத்தனர்.

இலையால் அன்பால் ஏத்தும் அவர்க்கு
நிலையா வாழ்வை நீத்தார் இடமாம்
தலையால் தாழுந் தவத்தோர்க் கென்றும்
தொலையாச் செல்வச் சோற்றுத் துறையே. 9

சுற்றார் தருநீர்ச் சோற்றுத் துறையுள்
முற்றா மதிசேர் முதல்வன் பாதத்
தற்றார் அடியார் அடிநாய் ஊரன்
சொற்றான் இவைகற் றார்துன் பிலரே. 10

திருச்சிற்றம்பலம்

---

## 17. பண் - செந்துருத்தி

### திருவாரூர்

திருச்சிற்றம்பலம்

மீளா அடிமை உமக்கே ஆளாய்ப் பிறரை வேண்டாதே, மூளாத் தீப்போல் உள்ளே கனன்று முகத்தால் மிகவாடி, ஆளாய் இருக்கும் அடியார் தங்கள் அல்லல் சொன்னக்கால், வாளாங் கிருப்பீர் திருவா ரூரீர் வாழ்ந்து போதீரே. 1

---

9. இலையால் - பத்திரங்களைக் கொண்டு. நிலையா வாழ்வை நீத்தார் - நிலையாமையை உடைய உலக வாழ்வை நீக்கி நிலை பெற்ற முத்தியின்பத்தை அருள்பவர்.

10. சுற்று ஆர்தரும் நீர் - சுற்றிலும் நிறைந்த நீரை உடைய. முற்றா மதி - பிறை.

1. மீளா - பிறரிடம் மீண்டு செல்லாத. வாளாங்கு - சும்மா.

விற்றுக் கொள்வீர் ஒற்றி அல்லேன் விரும்பி ஆட்பட்டேன், குற்றம் ஒன்றுஞ் செய்த தில்லை கொத்தை ஆக்கினீர், எற்றுக் கடிகேள் என்கண் கொண்டீர் நீரே பழிப்பட்டீர், மற்றைக் கண்தான் தாரா தொழிந்தால் வாழ்ந்து போதீரே. 2

அன்றில் முட்டா தடையுஞ் சோலை ஆரூர் அகத்தீரே, கன்று முட்டி உண்ணச் சுரந்த காலி யவைபோல, என்றும் முட்டாப் பாடும் அடியார் தங்கண் காணாது, குன்றில் முட்டிக் குழியில் விழுந்தால் வாழ்ந்து போதீரே. 3

துருத்தி உறைவீர் பழனம் பதியாச் சோற்றுத் துறைஆள்வீர், இருக்கை திருவா ரூரே உடையீர் மனமே எனவேண்டா, அருத்தி உடைய அடியார் தங்கள் அல்லல் சொன்னக்கால், வருத்தி வைத்து மறுமை பணித்தால் வாழ்ந்து போதீரே. 4

செந்தண் பவளந் திகழுஞ் சோலை இதுவோ திருவாரூர், எந்தம் அடிகேள் இதுவே ஆமா றுமக்காட் பட்டோர்க்குச், சந்தம் பலவும் பாடும் அடியார் தங்கண் காணாது, வந்தெம் பெருமான் முறையோ என்றால் வாழ்ந்து போதீரே. 5

தினைத்தாள் அன்ன செங்கால் நாரை சேருந் திருவாரூர்ப், புனைத்தார் கொன்றைப் பொன்போல் மாலைப் புரிபுன் சடையீரே, தனத்தால் இன்றித் தாந்தாம் மெலிந்து தங்

---

2. கொத்தை - குருடு. ஒரு கண் பெற்று மற்றொரு கண்ணைப் பெறுவதற்குப் பாடினமையின் 'மற்றைக்கண்' என்றார்.

3. காலி - பசு. தம் கண் காணாது - தம்முடைய கண் பார்க்கும் தொழிலைச் செய்யாமல்.

4. அருத்தி - அன்பு. வருத்தி வைத்து மறுமை பணித்தால் - இம்மையில் வருத்தத்தை உண்டுபண்ணி வைத்து, மறுமையின்பம் கிடைக்கும்படி கட்டளையிட்டால்.

6. தினைத்தாள் - தினைப்பயிரின் அடி. புனை தார் கொன்றை - புனைதலையுடைய கொன்றை மாலை. தனத்தால் இன்றி - செல்வக் குறைபாட்டால் இன்றி.

கண் காணாது, மனத்தால் வாடி அடியார் இருந்தால் வாழ்ந்து போதீரே. 6

ஆயம் பேடை அடையுஞ் சோலை ஆரூர் அகத்தீரே, ஏயெம் பெருமான் இதுவே ஆமா றுமக்காட் பட்டோர்க்கு, மாயங் காட்டிப் பிறவி காட்டி மறவா மனங்காட்டிக், காயங் காட்டிக் கண்ணீர் கொண்டால் வாழ்ந்து போதீரே.

கழியாய்க் கடலாய்க் கலனாய் நிலனாய்க் கலந்த சொல்லாகி, இழியாக் குலத்திற் பிறந்தோம் உம்மை இகழா தேத்துவோம், பழிதான் ஆவ தறியீர் அடிகேள் பாடும் பத்தரோம், வழிதான் காணா தலமந் திருந்தால் வாழ்ந்து போதீரே. 8

பேயோ டேனும் பிறிவொன் றின்னா தென்பர் பிற ரெல்லாம், காய்தான் வேண்டிற் கனிதான் அன்றோ கருதிக் கொண்டக்கால், நாய்தான் போல நடுவே திரிந்தும் உமக்காட் பட்டோர்க்கு, வாய்தான் திறவீர் திருவா ரூரீர் வாழ்ந்து போதீரே. 9

செருந்தி செம்பொன் மலருஞ் சோலை இதுவோ திரு வாரூர், பொருந்தித் திருமூ லட்டா னம்மே இடமாக் கொண்டீரே, இருந்தும் நின்றுங் கிடந்தும் உம்மை இகழா தேத்துவோம், வருந்தி வந்தும் உமக்கொன் றுரைத்தால் வாழ்ந்து போதீரே. 10

---

7. ஆயம் பேடை அடையும் - ஆண் பறவைக்கூட்டம் பெண் பறவைகளை வந்து அடையும். காயம் - உடம்பு.

8. கலன் - கப்பல். அலமந்து - மனம் சுழன்று.

9. பேயோடு நட்புச் செய்து பிரிந்தாலும் அப் பிரிவு துன்பத்தை உண்டாக்கும் என்பர்.

10. திருமூலட்டானம் - புற்றிடங்கொண்ட நாயகர் எழுந்தருளியுள்ள மூலஸ்தானம்.

காரூர் கண்டத் தெண்டோள் முக்கண் கலைகள் பல
வாகி, ஆரூர்த் திருமூ லட்டா னத்தே அடிப்பே ராரூரன்,
பாரூர் அறிய என்கண் கொண்டீர் நீரே பழிப்பட்டீர்,
வாரூர் முலையாள் பாகங் கொண்டீர் வாழ்ந்து போதீரே.

திருச்சிற்றம்பலம்

வரலாறு: திருவொற்றியூரிலிருந்து கண் இரண்டும் இன்றிப் புறப்பட்ட சுந்தரர் திருவேகம்பத்தில் ஒற்றைக் கண் பெற்று, பல தலங்களைத் தரிசித்துக்கொண்டு திருவாரூரை அடைந்தார். திருக்கோயிலிற் புக்குத் திருமூலட்டானத்தை இறைஞ்சி இப்பதிகம் பாடி மற்றைக் கண்ணும் அருளும்படி வேண்ட, இறைவர் அவ்வாறே கொடுத்தருளினார் (பெரிய. ஏயர்கோன். 308—310.)

---

## 18. பண் - பஞ்சமம்

## திருவாரூர்ப் பரவையுண்மண்டளி

திருச்சிற்றம்பலம்

தூவாயா தொண்டுசெய் வார்படு துக்கங்கள்
காவாயே கண்டுகொண் டார்ஐவர் காக்கிலும்
நாவாயால் உன்னையே நல்லன சொல்லுவேற்
காவாஎன் பரவையுண் மண்டளி அம்மானே. 1

பொன்னானே புலவர்க்கு நின்புகழ் போற்றலாம்
தன்னானே தன்னைப் புகழ்ந்திடுந் தற்சோதி
மின்னானே செக்கர் வானத் திளஞாயி
றன்னானே பரவையுண் மண்டளி அம்மானே. 2

---

1. தூவாயா: துர்வாச முனிவர் பூசித்த மூர்த்தியாதலின் தூவாயர் என்ற திருநாமம் அமைந்தது. ஐவர் - ஐம்பொறிகள். காக்கிலும் - நின்பால் செல்லாமல் தடுத்தாலும். ஆவா என் - அந்தோ என்று இரங்குவாயாக.
2. புலவர்க்குப் பொன்னாக இருப்பவன்.

நாமாறு துன்னையே நல்லன சொல்லுவார்
போமாறென் புண்ணியா புண்ணியம் ஆனானே
பேய்மாறாப் பிணமிடு காடுகந் தாடுவாய்க்
காமாறென் பரவையுண் மண்டளி அம்மானே. 3

நோக்குவேன் உன்னையே நல்லன நோக்காமைக்
காக்கின்றாய் கண்டுகொண் டார்ஐவர் காக்கினும்
வாக்கென்னும் மாலைகொண் டுன்னை என்மனத்
தார்க்கின்றேன் பரவையுண் மண்டளி அம்மானே. 4

பஞ்சேரும் மெல்லடி யாளையோர் பாகமாய்
நஞ்சேரும் நன்மணி கண்டம் உடையானே
நெஞ்சேர நின்னையே உள்கி நினைவாரை
அஞ்சேலென் பரவையுண் மண்டளி அம்மானே. 5

அம்மானே ஆகம சீலர்க் கருள்நல்கும்
பெம்மானே பேரரு ளாளன் பிடவூரன்
தம்மானே தண்டமிழ் நூற்புல வாணர்க்கோர்
அம்மானே பரவையுண் மண்டளி யம்மானே. 6

விண்டானே மேலையார் மேலையார் மேலாய
எண்டானே எழுத்தோடு சொற்பொருள் எல்லாம்உன்
கண்டானே கண்டனைக் கொண்டிட்டுக் காட்டாயே
அண்டானே பரவையுண் மண்டளி அம்மானே. 7

காற்றானே கார்முகில் போல்வதோர் கண்டத்தெம்
கூற்றானே கோல்வளை யாளைஓர் பாகமாய்
நீற்றானே நீள்சடை மேல்நிறை உள்ளதோர்
ஆற்றானே பரவையுண் மண்டளி யம்மானே. 8

---

4. வாக்கென்னும் மாலை - சொல்மாலை. ஆர்க்கின்றேன் - கட்டுகின்றேன்.

7. விண்டானே - எதன்கண்ணும் சாராமல் நீங்கியிருப்பவனே. மேலானவர்களுக்குள்ளே மேலானவர்களின் மேலான கருத்தாய் இருப்பவனே. எண் - எண்ணம். எழுத்து சொல் பொருள் என்னும் மூன்றும் உன் மூன்று கண்களாக உள்ளன.

8. எம் கூற்றானே - எம் பங்கில் இருப்பவனே; கால காலனே எனலும் ஆம்.

செடியேன்நான் செய்வினை நல்லன செய்யாத
கடியேன்நான் கண்டதே கண்டதே காமுறும்
கொடியேன்நான் கூறுமா றுன்பணி கூறுத
அடியேன்நான் பரவையுண் மண்டளி யம்மானே. 9

கரந்தையும் வன்னியும் மத்தமுங் கூவிளம்
பரந்தசீர்ப் பரவையுண் மண்டளி அம்மானை
நிரம்பிய ஊரன் உரைத்தன பத்திவை
விரும்புவார் மேலையார் மேலையார் மேலாரே. 10

திருச்சிற்றம்பலம்

வரலாறு: திருவேகம்பத்தில் ஒற்றைக் கண் பெற்று வரும் சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாரூரை அடைந்து, முதலில் பரவையுண் மண்டளியைத் தரிசித்து, இப்பதிகத்தைப் பாடினார் (பெரிய. ஏயர். 301—303.)

---

## திருநனிபள்ளி

திருச்சிற்றம்பலம்

ஆதியன் ஆதிரையன் அயன்மால் அறிதற்கரிய,சோதி
யன் சொற்பொருளாய்ச் சுருங்காமறை நான்கினையும், ஓதி
யன் உம்பர்தங்கோன் உலகத்தினுள் எவ்வுயிர்க்கும், நாதி
யன் நம்பெருமான் நண்ணும் ஊர்நனி பள்ளியதே. 1

---

9. செடியேன் - தீயவனாகிய நான்.
10. மத்தம் : ஊமத்தமலர். கூவிளம் - வில்வம். மேலை யாருக்கும் மேலையாருக்கும் மேலானவர்.

1. ஆதிரையன் - திருவாதிரை நட்சத்திரத்துக்கு உரிய வன். ஓதியன் - உரைத்தவன். நாதியன் - பற்றுக்கோடாக இருப்பவன்.

உறவிலி ஊனமிலி உணரார்புரம் மூன்றெரியச், செறுவிலி தன்னினைவார் வினையாயின தேய்ந்தழிய, அறவிலகும்அருளான் மருள்ஆர்பொழில் வண்டறையும், நறவிரி கொன்றையினான் நண்ணும் ஊர்நனி பள்ளியதே. 2

வானுடை யான்பெரியான் மனத்தாலும் நினைப்பரியான், ஆனிடை ஐந்தமர்ந்தான் அணு வாகியோர் தீஉருக்கொண், டூனுடை இவ்வுடலம் ஒடுங்கிப்புகுந் தான் பரந்தான், நானுடை மாடெம்பிரான் நண்ணும் ஊர்நனி பள்ளியதே. 3

ஓடுடை யன்கலனா உடைகோவண வன்உமையோர், பாடுடை யன்பலிதேர்ந் துணும்பண்புடை யன்பயிலக், காடுடை யன்னிடமா மலைஏழுங் கருங்கடல்சூழ், நாடுடை நம்பெருமான் நண்ணும்ஊர் நனிபள்ளியதே.

பண்ணற் கரியதொரு படைஆழி தனைப்படைத்துக், கண்ணற் கருள்புரிந்தான் கருதாதவர் வேள்விஅவி, உண்ணற் கிமையவரை உருண்டோட உதைத்துகந்து, நண்ணற் கரியபிரான் நண்ணும் ஊர்நனி பள்ளியதே. 5

மல்கிய செஞ்சடைமேல் மதியும்அர வும்முடனே, புல்கிய ஆரணன்எம் புனிதன்புரி நூல்விகிர்தன், மெல்கிய

---

2. எரியும்படியாகச் செற்ற வில்லை யுடையவன்; விலி - வில்லி. தன்னைத் தியானிப்பவர் பாவங்கள் தேய்ந்து அழியவும் அறவும் விளங்குகின்ற திருவருளை உடையவன். மருள் ஆர் - செறிவினால் இருண்டு மயக்கம் நிறைந்த.

3. அமர்ந்தான் - விரும்பியவன். மாடு - செல்வம்.

4. கலனாக ஓட்டை உவடயவன். ஓர் பாடு - ஒரு பக்கத்தில்.

5. படை ஆழி - சக்கராயுதம். கண்ணற்கு - கண்ணை அருச்சித்த திருமாலுக்கு. தன்னை எண்ணாத தக்கனைச் சார்ந்தோர் செய்த வேள்வியில் அவியை உண்டதற்காகத் தேவரை உருண்டு ஓடும்படி உதைத்து உகந்தவன்.

விற்றொழிலான் விருப்பன்பெரும் பார்த்தனுக்கு, நல்கிய நம்பெருமான் நண்ணும்ஊர் நனிபள்ளியதே. 6

அங்கமொ ராறவையும் அருமாமறை வேள்விகளும், எங்கும் இருந்தந்தணர் எரிமூன்றவை ஓம்பும்இடம், பங்கய மாமுகத்தாள் உமைபங்கன் உறைகோயில், செங்கயல் பாயும்வயல் திருவூர்நனி பள்ளியதே. 7

திங்கட் குறுந்தெரியல் திகழ்கண்ணியன் நண்ணியனாய், நங்கட் பிணிகளைவான் அருமாமருந் தேழ்பிறப்பும், மங்கத் திருவிரலால் அடர்த்தான்வல் அரக்கனையும்,நங்கட் கருளும்பிரான் நண்ணும் ஊர்நனி பள்ளியதே. 8

ஏன மருப்பினொடும் எழில்ஆமையும் பூண்டுகந்து, வான மதில்அரணம் மலையேசிலை யாவளைத்தான், ஊனமில் காழிதன்னுள் உயர்ஞானசம் பந்தர்க்கன்று, ஞானம் அருள்புரிந்தான் நண்ணும் ஊர்நனி பள்ளியதே 9

காலமும் நாழிகையும் நனிபள்ளி மனத்தின் உள்கிக், கோலம தாயவனைக் குளிர்நாவல ஊரன்சொன்ன, மாலை மதித்துரைப்பார் மண்மறந்துவா னோர்உலகில், சாலநல் இன்பம் எய்தித் தவலோகத் திருப்பவரே. 10

திருச்சிற்றம்பலம்

நாடு: சோழ நாடு
சுவாமி: நற்றுணையப்பர்; அம்பிகை : பர்வதராசபுத்திரி.

---

6. மல்கிய - நிறைந்த. ஆரணன் - வேதப்பொருளாக உள்ளவன். பெரும்பார்த்தனிடத்தில் மென்மையாகச் செய்த விற்றொழிலை உடையவன்.

7. அங்கம் - சாத்திரம். எரி மூன்று - ஆகவனீயம், தாக்ஷிணாக்கினி, காருகபத்தியம். முகத்தாளாகிய உமை.

8. ஏழ் பிறப்பிலும் அரிய பெரிய மருந்தாக இருப்பவன்.

9. ஆமை - இங்கே, ஆமை ஓடு.

10. கோலமது ஆயவன் - அழகிய திருக்கோலமாகி நிற்பவன். தவலோகத்து-தவம் செய்தோர் வாழும் சிவலோகத்தில்.

# திருநன்னிலத்துப்பெருங்கோயில்

## திருச்சிற்றம்பலம்

தண்ணியல் வெம்மையினன் தலையிற்கடை தோறும் பலி, பண்ணியல் மென்மொழியார் இடக்கொண்டுழல் பண்டரங்கன், புண்ணிய நான்மறையோர் முறையால்அடி போற்றிசைப்ப, நண்ணிய நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 1

வலங்கிளர் மாதவஞ்செய் மலைமங்கையோர் பங்கினனாய்ச், சலங்கிளர் கங்கைதங்கச் சடைஒன்றிடையே தரித்தான், பலங்கிளர் பைம்பொழில்தண் பனிவெண்மதி யைத்தடவ, நலங்கிளர் நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 2

கச்சிய னின்கருப்பூர் விருப்பன்கரு திக்கசிவார், உச்சியன் பிச்சைஉண்ணி உலகங்கள்எல் லாம்உடையான், நொச்சியம் பச்சிலையான் நுரைதீர்புன லால்தொழுவார், நச்சிய நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 3

பாடிய நான்மறையான் படுபல்பிணக் காடரங்கா, ஆடிய மாநடத்தான் அடிபோற்றிஎன் றன்பினராய்ச்,

---

1. தண் இயல் வெம்மையினன்-தண்ணிய இயல்போடு சேர்ந்த வெம்மையை உடையவன்; முரண்பாடுள்ளனபோல் தோன்றும் இயல்புடையவன் என்றபடி. இயல்பினால் தண்மையாக உள்ளவனேனும் தோற்றத்தால் வெம்மையாக உள்ளவன் எனலும் ஆம். புற வெம்மையும் அகத்தண்மையுமாகிய மறக் கருணைக்கு இருப்பிடமானவன் என்றபடி. கடைதோறும் - வாயில்தோறும். பலி கொண்டு உழல். முறையால் - மரபின்படி; ஆகம நூல்களால் எனலுமாம்.

2. பலம் - பழம்.

3. கசிவார் - அன்பினால் உருகுபவர். நொச்சியாகிய பச்சிலையாலும் தெளிந்த புனலாலும் பூசித்துத் தொழுபவர்; நொச்சி, பஞ்ச வில்வங்களுள் ஒன்று.

சூடிய செங்கையினார் பலதோத்திரம் வாய்த்தசொல்லி, நாடிய நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 4

பிலந்தரு வாயினொடு பெரிதும்வலி மிக்குடைய, சலந்தரன் ஆகம்இரு பிளவாக்கிய சக்கரமுன், நிலந் தரு மாமகள்கோன் நெடுமாற்கருள் செய்தபிரான், நலந் தரு நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 5

வெண்பொடி மேனியினான் கருநீல மணிமிடற்றான், பெண்படி செஞ்சடையான் பிரமன்சிரம் பீடழித்தான், பண்புடை நான்மறையோர் பயின்றேத்திப்பல் காலுவ ணங்கும், நண்புடை நன்னிலத்துப் பெருங்கோயில் நயந் தவனே. 6

தொடைமலி கொன்றைதுன்றுஞ் சடையன்சுடர் வெண்மழுவாட், படைமலி கையன்மெய்யிற் பகட்டீருரிப் போர்வையினான், மடைமலி வண்கமலம் மலர்மேல்மட வன்னம் மன்னி, நடைமலி நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 7

குளிர்தரு திங்கள்கங்கை குரவோடரக் கூவிளமும், மிளிர்தரு புன்சடைமேல் உடையான்விடை யான்விரை சேர், தளிர்தரு கோங்குவேங்கை தடமாதவி சண்பகமும், நளிர்தரு நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 8

---

4. சூடிய - தலைமேற் குவித்த.

5. பிலந்தருவாய் - குகையைப்போன்ற ஆழமான வாய். சலந்தரனை அறுத்த சக்கரத்தைத் திருமாலுக்கு அருளியவன். நிலமகளுக்கும் மாமகளுக்கும் கோன்.

6. பெண்படி - கங்கைதங்கிய.

7. பகட்டு ஈர்உரிப் போர்வையினான் - யானையினது ஈர மான தோலைப் போர்வையாக உடையவன். கமலம் மலர்: செய்யுள் விகாரம்.

8. அர - பாம்பு. நளிர்தரு - குளிர்ச்சியைத் தருகின்ற.

கமர்பயில் வெஞ்சுரத்துக் கடுங்கேழற்பின் கானவ
னாய், அமர்பயில் வெய்திஅருச் சுனனுக்கருள் செய்தபி
ரான், தமர்பயில் தண்விழவில் தகுசைவர் தவத்தின் மிக்க,
நமர்பயில் நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 9

கருவரை போல்அரக்கன் கயிலைம்மலைக் கீழ்க்கதற,
ஒருவிர லால்அடர்த்தின் னருள்செய்த உமாபதிதான்,
திரைபொரு பொன்னிநன்னீர்த் துறைவன்திகழ் செம்பி
யர்கோன், நரபதி நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்
தவனே. 10

கோடுயர் வெங்களிற்றுத் திகழ்கோச்செங்க ணான்
செய்கோயில், நாடிய நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்
தவனைச், சேடியல் சிங்கிதந்தை சடையன்திரு வாரூரன்,
பாடிய பத்தும்வல்லார் புகுவார்பர லோகத்துளே. 11

திருச்சிற்றம்பலம்

---

## திருநாகேச்சரம்

திருச்சிற்றம்பலம்

பிறையணி வாள்நுதலாள் உமையாளவள் பேழ்க
ணிக்க, நிறையணி நெஞ்சனுங்க நீலமால்விடம் உண்ட
தென்னே, குறையணி குல்லைமுல்லை அளைந்துகுளிர் மாதவி
மேல்,சிறையணி வண்டுகள்சேர் திருநாகேச் சரத்தானே. 1

---

9. கமர் - வெடிப்பு. கேழல் - பன்றி. கானவனாய் - வேடுவனாகி.

10. பொன்னி - காவிரி. செம்பியர் கோன் - கோச்செங்கட் சோழன்.

11. சேடு - பெருமை.

1. பேழ்கணிக்க - அஞ்ச. அனுங்க - வருந்த. குல்லை - கஞ்சங்குல்லை; துளவமும் ஆம்.

அருந்தவ மாமுனிவர்க் கருளாகியோர் ஆலதன்கீழ், இருந்தற மேபுரிதற் கியல்பாகிய தென்னைகொலாம், குருந் தய லேகுரவம் அரவின்னெயி றேற்றரும்பச், செருந்தி செம் பொன்மலருந் திருநாகேச் சரத்தானே. 2

பாலன தாருயிர்மேற் பரியாது பகைத்தெழுந்த காலனை வீடுவித்துக் கருத்தாக்கிய தென்னைகொலாம், கோல மலர்க்குவளைக் கழுநீர்வயல் சூழ்கிடங்கில், சேலொடு வாளைகள்பாய் திருநாகேச் சரத்தானே. 3

குன்ற மலைக்குமரி கொடியேரிடை யாள்வெருவ, வென்றி மதகரியின் உரிபோர்த்ததும் என்னைகொலாம், முன்றில் இளங்கமுகின் முதுபாளை மதுவளைந்து, தென்றல் புகுந்துலவுந் திருநாகேச் சரத்தானே. 4

அரைவிரி கோவணத்தோ டரவார்த்தொரு நான் மறைநூல், உரைபெரு கவ்வுரைத்தன் றுகந்தருள் செய்த தென்னே, வரைதரு மாமணியும் வரைச்சந்தகி லோடும் உந்தித், திரைபொரு தண்பழனத் திருநாகேச் சரத் தானே. 5

தங்கிய மாதவத்தின் தழல்வேள்வியி னின்றெழுந்த, சிங்கமும் நீள்புலியுஞ் செழுமால்கரி யோடலறப், பொங் கிய போர்புரிந்து பிளந்தீருரி போர்த்ததென்னே, செங்க யல் பாய்கழனித் திருநாகேச் சரத்தானே. 6

நின்றஇம் மாதவத்தை ஒழிப்பான்சென் றணைந்து மிகப், பொங்கிய பூங்கணைவேள் பொடியாக விழித்த லென்னே, பங்கய மாமலர்மேல் மதுஉண்டுவண் டேன்

---

2. குரா அரும்புக்குப் பாம்பின் பல் உவமை.
3. பாலன் - மார்க்கண்டேயர். பரியாது - இரங்காமல்.
4. முன்றில் - சோலையின் முன்னிடத்தில் உள்ள.
5. மணி - வயிரம். சந்து - சந்தனம்.
6. வேள்வி - தாருகாவனத்து முனிவர் செய்த யாகம்.
7. பூங்கணை வேள் - மலராகிய அம்பையுடைய காமன். தேன் - வண்டு.

முரலச், செங்கயல் பாய்வயல்சூழ் திருநாகேச் சரத் தானே. 7

வரியர நாணதாக மாமேரு வில்லதாக, அரியன முப் புரங்க ளவைஆரழல் ஊட்டல்என்னே, விரிதரு மல்லி கையும் மலர்ச்சண்பக மும்மளைந்து, திரிதரு வண்டுபண் செய் திருநாகேச் சரத்தானே. 8

அங்கியல் யோகுதன்னை அழிப்பான்சென் றணைந்து மிகப், பொங்கிய பூங்கணைவேள் பொடியாக விழித்தல் என்னே, பங்கய மாமலர்மேல் மதுவுண்டுபண் வண்டறை யச், செங்கயல் நின்றுகளூந் திருநாகேச் சரத்தானே. 9

குண்டரைக் கூறைஇன்றித் திரியுஞ்சமண் சாக்கியப் பேய், மிண்டரைக் கண்டதன்மை விரவாகிய தென்னை கொலோ, தொண்டிரைத் துவணங்கித் தொழில்பூண்டடி யார்பரவும், தெண்டிரைத் தண்வயல்சூழ் திருநாகேச் சரத்தானே. 10

கொங்கணை வண்டரற்றக் குயிலும்மயி லும்பயிலும், தெங்கணை பூம்பொழில்சூழ் திருநாகேச் சரத்தானை, வங்கம் மலிகடல்சூழ் வயல்நாவலா ரூரன்சொன்ன, பங்கமில் பாடல்வல்லா ரவர்தம்வினை பற்றறுமே. 11

திருச்சிற்றம்பலம்

நாடு : சோழ நாடு

சுவாமி: சண்பகாரணியேசுவரர்

அம்பிகை: குன்றமுலையம்மை

---

8. வரி அர நாணதாக - கோடுகளை உடைய பாம்பு நாண் கயிருக.

10. குண்டு - தாழ்வையுடைய. அரைக்கூறையின்றி - இடையிலே ஆடையுமில்லாமல். தொண்டு - தொண்டர்கள். இரைத்து - முழங்கி.

11. கொங்கு - பூந்தாது. தெங்கு - தென்னை. வங்கம் - கப்பல். வயல்கள் கப்பல் மலிந்த கடலை நினைக்கச் செய்கின் றன. பரப்பும் நீர்வளமும் இத்தகையன என்றபடி.

# திருநொடித்தான்மலை

## திருச்சிற்றம்பலம்

தானெனை முன்படைத்தான் அதறிந்துதன் பொன்னடிக்கே, நானென பாடலந்தோ நாயினேனைப் பொருட்படுத்து, வானெனைவந் தெதிர்கொள்ள மத்தயானை அருள்புரிந்து, ஊனுயிர் வேறுசெய்தான் நொடித்தான்மலை உத்தமனே. 1

ஆனை உரித்தபகை அடியேனொடு மீளக்கொலோ, ஊனை உயிர்வெருட்டி ஒள்ளியானை நினைந்திருந்தேன், வானை மதித்தமரர் வலஞ்செய்தெனை ஏறவைக்க, ஆனை அருள்புரிந்தான் நொடித்தான்மலை உத்தமனே. 2

மந்திரம் ஒன்றறியேன் மனைவாழ்க்கை மகிழ்ந்தடியேன், சுந்தர வேடங்களால் துரிசேசெயுந் தொண்டன் எனை, அந்தர மால்விசும்பில் அழகானை அருள்புரிந்த, துந்தர மோநெஞ்சமே நொடித்தான்மலை உத்தமனே. 3

வாழ்வை உகந்தநெஞ்சே மடவார்தங்கள் வல்வினைப் பட், டாழ முகந்தஎன்னை அதுமாற்றி அமரரெல்லாம், சூழ அருள்புரிந்து தொண்டனேன் பரம்அல்லதொரு, வேழம் அருள்புரிந்தான் நொடித்தான்மலை உத்தமனே. 4

---

1. வான் - தேவலோகத்தார். ஊன் உயிர் வேறு செய்தான் - ஊனையும் உயிரையும் வேறாக்கினான். நொடித்தான் மலை - கைலையங்கிரி.

2. ஆனையை முன்பு உரித்த பகை என்னால் நீங்கும் பொருட்டோ எனக்கு யானையை அருளி அதன்மேல் ஊர்ந்து தன்பால் வரச் செய்தான்.

3. அழகிய கோலங்கள் பூண்டு அவற்றால் குற்றத்தையே செய்த. அழகையுடைய யானை. அருள் புரிந்ததும் தரமோ - அருள் செய்த செயலும் என் தகுதிக்கு ஏற்றதோ.

4. தொண்டனேன் பரம் அல்லதொரு வேழம் - தொண்டனாகிய என்னால் தாங்குதற்குரியதல்லாத பெரு மதிப்பையுடைய யானையை.

மண்ணுல கிற்பிறந்து நும்மைவாழ்த்தும் வழியடி யார், பொன்னுல கம்பெறுதல் தொண்டனேன்இன்று கண்டொழிந்தேன், விண்ணுல கத்தவர்கள் விரும்ப வெள்ளை யானையின்மேல், என்னுடல் காட்டுவித்தான் நொடித்தான்மலை உத்தமனே. 5

அஞ்சினை ஒன்றிநின்று அலர்கொண்டடி சேர்வறியா, வஞ்சனை என்மனமே வைகிவானநன் னாடர்முன்னே, துஞ்சுதல் மாற்றுவித்துத் தொண்டனேன்பரம் அல்லதொரு, வெஞ்சின ஆனைதந்தான் நொடித்தான்மலை உத்தமனே. 6

நிலைகெட விண்அதிர நிலம்எங்கும் அதிர்ந்தசைய, மலையிடை யானைஏறி வழியேவருவேன் எதிரே, அலைகட லால்அரையன் அலர்கொண்டுமுன் வந்திறைஞ்ச, உலையணை யாதவண்ணம் நொடித்தான்மலை உத்தமனே. 7

அரவொலி ஆகமங்கள் அறிவார்அறி தோத்திரங்கள், விரவிய வேதஒலி விண்ணெலாம்வந் தெதிர்ந்திசைப்ப, வரமலி வாணன்வந்து வழிதந்தெனக் கேறுவதோர், சிரமலி யானைதந்தான் நொடித்தான்மலை உத்தமனே. 8

இந்திரன் மால்பிரமன் எழிலார்மிகு தேவரெல்லாம், வந்தெதிர் கொள்ளஎன்னை மத்தயானை அருள்புரிந்து, மந்திர மாமுனிவர் இவனார்என எம்பெருமான், நந்தமர் ஊரனென்றான் நொடித்தான்மலை உத்தமனே. 9

---

6. அஞ்சினை ஒன்றி - ஐம்பொறிகளோடு சேர்ந்து. அலர் கொண்டு - அருச்சிப்பதற்குரிய மலர்களைக் கைக்கொண்டு. அலர் கொண்டு சேர்தலை அறியாத. அலர் - பழியுமாம். நின்று கொண்டு அறியா எனக் கூட்டுக. துஞ்சுதல் - இறத்தலை.

7. அலைகடல் ஆளுகின்ற அரையன் - வருணன். உலை - அழிவு.

8. அர ஒலி - ஹரஹர என்ற முழக்கம். ஏறுவதோர் சிரம்மலி - ஏறுவதற்குரிய தலை பெரிதாக உள்ள.

ஊழிதோ றூழிமுற் றும் உயர்பொன்நொடித் தான்மலையைச், சூழிசை யின்கரும்பின் சுவைநாவல வூரன்சொன்ன, ஏழிசை இன்றமிழால் இசைந்தேத்திய பத்திவையும், ஆழி கடலரையா அஞ்சையப்பர்க் கறிவிப்பதே. 10

திருச்சிற்றம்பலம்

வரலாறு: சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவஞ்சைக்களத் திருக்கோயிற்குச் சென்று தரிசித்துப் புறம்போத, சிவபெருமானது ஏவலால் சிவகணங்களும் தேவர்களும் வெள்ளையானை ஒன்றைக் கொணர்ந்து சுந்தரமூர்த்தி சுவாமிகளை ஏற்றிக் கொண்டு கைலாயத்துக்கு அழைத்துச் சென்றனர். அப்போது பாடிய திருப்பதிகம் இது.

ஏழாந் திருமுறை முற்றுப் பெற்றது.

---

10. கடலரையா - வருணனே. அஞ்சையப்பர் - சேரமான் பெருமாள் நாயனர். அறிவிப்பது - அறிவிக்க; வியங்கோள்.

திருச்சிற்றம்பலம்

# செய்யுள் முதற்குறிப்பகராதி

உ

செந்திலாண்டவன் துணை

# திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம்

## ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் ஏற்படுத்தப்பெற்றுள்ள தருமங்களின் விவரம்

---

| எண் | விவரம் | நிதி ரூபாய் |
|---|---|---|
| 1 | சிவஞானசித்தியார் உபன்னியாசக் கட்டளை, அண்ணாமலைப் பல்கலைக் கழகம் .... | 15,000 |
| 2 | கொட்டையூரில் நடுத்தரக் கல்விச்சாலை ஏற்படுத்த ... | 11,500 |
| 3 | திருவாங்கூர் மகாராசா தேவாரப் பரிசு ... | 5,000 |
| 4 | சேரமான் பெருமாள் தேவாரப் பரிசு .... | 5,000 |
| 5 | மூவர் தேவாரப் பரிசு, சீகாழி, திருவாரூர், திருவையாறு, திருப்பனந்தாள் .... | 10,000 |
| 6 | ஸ்ரீ காசிப் பல்கலைக் கழகத்தில் சைவ சித்தாந்த போதகாசிரியர் நியமிக்க .... | 60,000 |
| 7 | அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் சைவ சித்தாந்த உபகாரச் சம்பளம் அளிக்க .... | 30,000 |
| 8 | திருப்பனந்தாளில் தமிழ்க்கல்லூரி நிறுவ | 1,50,000 |
| 9 | இசைத் தமிழ்க் கல்விக்கு .... | 1,00,000 |
| 10 | திருப்பனந்தாளில் கால்நடை வைத்திய சாலை ஏற்படுத்தவும், குடந்தைக் கல்லூரியில் உபகாரச் சம்பளம் அளிக்கவும் .... | 20,000 |
| 11 | ஸ்ரீ காசியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னதானம் .... | 10,000 |
| 12 | இராமேசுவரத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னதானம் .... | 10,000 |

| | | |
|---|---|---|
| 13 | திருநள்ளாற்றில் ஆவணிமூல அன்னதானம் | 3,000 |
| 14 | ஸ்ரீ காசியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு மார்கழி மாத அன்னதானம் .... | 17,000 |
| 15 | திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி மாணவர்கள் உணவு நிதி .... | 1,00,000 |
| 16 | திருப்பனந்தாளில் ஜன வைத்தியசாலை | , ஏ. 44 செ. 22 நிலவரும்படி |
| 17 | திருப்பனந்தாள் மண்ணியாற்றில் கேதாரக் கட்டம் .... | 2,900 |
| 18 | திருப்பனந்தாள் மண்ணியாற்றில் அரிச்சந்திரக் கட்டம் .... | 3,000 |
| 19 | கும்பகோணம் மணிக்கூண்டு .... | 25,000 |
| 20 | தஞ்சையில் காசநோய் வைத்தியசாலை .... | 21,000 |
| 21 | ஸ்ரீ வைகுண்டம் ஸ்ரீ குமரகுருபரர் நினைவுநாள் அன்னதானம் .... | 9,000 |
| 22 | மைசூர் மகாராசா தேவாரப் பரிசு .... | 5,000 |
| 23 | மாயூரத்தில் தேவாரப் பரிசு .... | 5,000 |
| 24 | சென்னை விவேகாநந்தா கல்லூரியில் சைவசித்தாந்தக் கட்டளை .... | 10,000 |
| 25 | ஸ்ரீகாசிப் பல்கலைக் கழகத்தில் சைவ சித்தாந்தக் கட்டளை .... | 20,000 |
| 26 | ஸ்ரீ வைகுண்டம் தேவாரப் பரிசு .... | 5,000 |
| 27 | மதுரைத் திருமலைநாயக்கர் தேவாரப் பரிசு | 10,000 |
| 28 | ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம், ஸ்ரீ வைகுண்டம், திருச்செந்தூர், திருநெல்வேலி மாணவிகட்கு .... | 1,00,000 |
| 29 | ஸ்ரீகாசியில் மகாத்மா காந்தியடிகள் நினைவு அன்னதானம் .... | 5,000 |
| 30 | ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீ காசி, மதுரை, குடந்தை மாணவிகட்கு .... | 1,50,000 |
| 31 | டாக்டர் சுவாமிநாதையர் நினைவுத் திருக்குறள் பரிசு சென்னை .... | 3,500 |
| 32 | குடந்தையில் காந்தியடிகள் பசுப் பரிசு .... | 1,000 |

| | | |
|---|---|---|
| 33 | காந்தியடிகள் நினைவு அரியநாயகிபுரத்தில் ஹரிஜன மாணவ உபகார நிதி .... | 3,000 |
| 34 | ஸ்ரீ வைகுண்டத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நித்திய மகேசுவர பூசை .... | 10,000 |
| 35 | திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவர சுவாமிக்கு வெள்ளிக் கவசம் .... | 4,000 |
| 36 | விஷ்ணுபுரத்தில் ஹைஸ்கூல் படிப்பக நிதி | 1,000 |
| 37 | குடந்தையில் ராஜாஜி அபிராமி அந்தாதிப் பரிசு .... | 3,500 |
| 38 | திருநெல்வேலியில் அபிராமி அந்தாதிப் பரிசு .... | 3,500 |
| 39 | திருப்பனந்தாளில் தண்ணீர்ப் பந்தல் தருமம் .... | 3,500 |
| 40 | ஸ்ரீ வைகுண்டத்தில் படிப்பக நிதி .... | 3,500 |
| 41 | சிதம்பரம் உயர்தரப் பாடசாலை மாணவர்களுக்கு உணவு நிதி .... | 35,000 |
| 42 | சிதம்பரத்தில் திருவாதிரை, ஆனி உத்தரம் நாட்களில் அன்னதானம் .... | 12,000 |
| 43 | இராமேசுவரத்தில் ஆடி, தை அமாவாசைகளில் அன்னதானம் .... | 3,500 |
| 44 | ஸ்ரீவைகுண்டத்தில் நூல் நிலையக் கட்டிடம் | 10,825 |
| 45 | பஞ்சாப் அகதிகள் நிவாரண நிதி .... | 5,000 |
| 46 | அரியநாயகிபுரத்தில் நூல் நிலைய நிதி .... | 3,500 |
| 47 | ஸ்ரீகாசி கேதாரீசுவரர் கோவிலில் ஏழைகள் அன்னதானம் .... | 5,000 |
| 48 | ஸ்ரீவில்லிபுத்தூரில் தேவாரப் பரிசு .... | 3,500 |
| 49 | திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவர சுவாமி கோவிலில் மின்சார தீபம்போட .... | 7,500 |
| 50 | காஞ்சியில் மூவர் தேவாரப் பரிசு .... | 5,000 |
| 51 | திருவஞ்சைக்களத்தில் சேரமான் பெருமாள் நினைவு அன்னதானம் .... | 7,000 |

| | | |
|---|---|---|
| 52 | 28வது நம்பர் ஸ்ரீசெந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீ வைகுண்டம் முதல் ஆண்டு உதவி நிதி .... | 5,000 |
| 53 | 30வது நம்பர் ஸ்ரீசெந்திலாண்டவன் உணவு நிதியின் ஸ்ரீ காசிப் பல்கலைக் கழக முதல் இரண்டு ஆண்டு மூலதனம் .... | 14,000 |
| 54 | 28வது நம்பர் ஸ்ரீசெந்திலாண்டவன் நிதியின் திருச்செந்தூர் முதல் ஆண்டு உதவி மூலதனம் .... | 5,000 |
| 55 | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீகுமரகுருபரசுவாமிகள் படிப்பகப் பராமரிப்புக்காகக் கட்டிடமும் நிலமும் .... | 15,000 |
| 56 | மாளவியாஜி பெயரால், கல்கத்தா, டெல்லி, அலகாபாத், லக்னோ, ஆக்ரா, அலிகார் முதலிய பல்கலைக் கழகங்களில் சைவ சித்தாந்த உபன்னியாசக் கட்டளை .... | 5,000 |
| 57 | ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம், சிதம்பரம், மதுரை, திருச்செந்தூர் .... | 60,000 |
| 58 | பனசை மண்ணியாற்றுச் சோமேசர் துறை கட்ட .... | 1,500 |
| 59 | ஸ்ரீவைகுண்டம் பெண்கள் உயர்நிலைக் கல்விக் கூடம் நிறுவ .... | 45,000 |
| 60 | ஸ்ரீவைகுண்டம் தேவார மாணவர்கள் காசி யாத்திரை நிதி .... | 5,000 |
| 61 | பனசைக் கல்லூரியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுப் பரிசு .... | 5,000 |
| 62 | 6வது ஸ்ரீ காசி பல்கலைக்கழகத்தில் சைவ சித்தாந்த நிதிக்கு அதிகப்படியாகக் கொடுத்தது .... | 16,000 |
| 63 | 30வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் - (மதுரை முதலாண்டு உதவி மூலதனம்) .... | 7,000 |